2 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண் "எம். 8798

## வாழ்க்கைச் செலவு 26 சதவீதம் தான் உயர்ந்ததாம்

புதுடெல்லி, பிப். 20—

1974-ஆம் ஆண்டில், ஏப்ரல் முதல் டிசம்பர் வரையிலான காலத்தில் மட்டும் வாழ்க்கை செலவு 26 சதவீதம் உயர்ந்துள்ளது.

நாடாளுமன்றத்தில் எழுத்து மூலம் அளித்த பதிலில் இந்த விவரம் கூறப்பட்டுள்ளது.

இது அரசாங்கம் தரும் விவரம். ஆனல் உண்மையிலேயே உயர்ந்தது—இப்போது உயர்ந்துள்ள சதவீதம் இதைவிடக் கூடுதலாக இருக்கும்.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 13 மதுரை 22—2—75 சனி மலர்: 19

## பிச்சைக்காரர்கள் 7 லட்சம் தானும்

புதுடெல்லி, பிப். 20—

1971 ஆம் ஆண்டு மக்கள் தொகை கணக்கெடுப்பின்படி, இந்தியாவில் பிச்சைக்காரர்களும் தெருக்களில் சோம்பேறிகளாக அலைபவர்களுமாக உள்ளவர்கள் 7 இலட்சதது 44 ஆயிரத்து 550 பேர்தான் என்றுமாநிலங்கள அவையில், ஒரு கேள்விக்கு பதில் அளிக்கையில் தெரிவிக்கப்பட்டது.

கணக்கெடுப்பு நடந்தது, 1971-ல் பிச்சைக்காரர்கள் அனைவரும் இக்கணக்கெடுபபிற்குள் உட்பட்டிருக்க மாட்டார்கள் தவிர, 1971-க்குப் பிறகு காங்கிரஸ் ஆட்சியில் நெருக்கடி அதிகமாகி பலகோடிப் பேர் ஓட்டாண்டிகளாகியுள்ளனர்.

## ★ அவசர நிலை நீடிப்பதும், அடக்குமுறை வலுப்பதும் பாசிசத்துக்கு அறிகுறி

## ★ ஒரு கட்சி சர்வாதிகாரத்துக்கு ஆளும் காங்கிரஸ் திட்டமிட்டு வருகிறது

# கேரளத்திலும் மோசடித் தேர்தலுக்கு சதி

## பருவாவின் திமிருக்கு பி. ராமமூர்த்தி சாட்டை

மதுரை, பிப். 20 —

**கேரள மாநிலத்தில் எவ்வளவுதான் பலமான கட்சியாக மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி விளங்கிய போதிலும், அடுத்த தேர்தலில் அது அழிக்கப்படும் என்றும் — ஜோதிபாசுவுக்கு ஏற்பட்ட கதிதான் இ.எம்.எஸ் க்கும் ஏற்படுமென்றும், இரண்டு நாட்களுக்கு முன்னே எர்ணுகுளத்தில் காங்கிரஸ் தலைவர் டி.கே. பருவா பேசியிருப்பதானது மேற்குவங்கத்தில் கடைப்பிடித்த அதே பாசிஸ்ட் முறைகளையே கேரளத்திலும் கடைப்பிடிக்க காங்கிரஸ் தயார் செய்கிறது என்பதையே எடுத்துக் காட்டுகிறது"— என்று தோழர் பி. ராமமூர்த்தி கூறினர்.**

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநில செயற்குழு கூட்டம், இம்மாதம் 18, 19 தேதிகளில் திருச்சியில் நடைபெற்றது. இக்கூட்டத்தில் பொலிட் பீரோ உறுப்பினர் தோழர் பி. ராமமூர்த்தி கலந்து கொண்டார். செயற்குழு முடிவுகள் பற்றி பத்திரிகை நிருபர்களிடம் விளக்குகையிலேயே மேற்கண்டவாறு பி. ராமமூர்த்தி குறிப்பிட்டார்.

செயற்குழு கூட்டத்தில் கட்சியின் தமிழகச் செயலாளர் ஏ. பாலசுப்ரமண்யம், எம். ஆர். வெங்கட்ராமன், ஆர். உமாநாத், கே. ரமணி, என். சங்கரய்யா, ஆர். ராமராஜ், ஏ. நல்லசிவன், கே. முத்தையா, ஏ. பி. பழனிச்சாமி ஆகிய 9 பேர்களும் கலந்துகொண்டனர்.

### பருவாவுக்கு ராமமூர்த்தி கண்டனம்

கேரளத்தில் மார்க்சிஸ்ட்கட்சி பலமுள்ளதாக இருந்த போதிலும், தேர்தலில் அது அழிக்கப்படும் என்றும், மேற்கு வங்கத்தில் ஜோதிபாசுவுக்கு ஏற்பட்ட கதியே, கேரளத்தில் இ. எம். எஸ் க்கும் ஏற்படுமென்றும் டி. கே. பருவா பேசிய தற்கு மார்க்சிஸ்ட் தலைவர் பி. ராமமூர்த்திபலத்த கண்டனம் தெரிவித்தார்,

இச்சமயத்தில் மேற்கு வங்கத்தில் எவ்வாறு பாசிஸ்ட் அடக்குமுறைகளைக் கையாண்டும், ஓட்டுப் போடும் உரிமையைக் கூட பறிததும் ஜனநாயகத்தைக் கொன்ருர்கள் என்பதைப் பற்றியும் பி ராமமூர்ததி விளக்கினர். அவர் பேசுகையில் :—

### வாக்குச் சாவடிகளை கைப்பற்றிக் கொண்டனர்

"மேற்கு வங்கத்தில் 1971-ம் ஆண்டு தேர்தலில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தன்னந்தனியாகவே நின்று முதற்பெரும் கட்சியாக முன் வந்தது. அந்தக் கட்சியை அழிப்பதற்காக குண்டர்களை ஏவினர்கள். அந்தக குண்டர்களை யாரும் எதிர்க்காதிருக்க, அவர்களுக்கு போலீஸ் பாதுகாப்பு அளித்தார்கள்.

ஆயிரக்கணக்கான குண்டர்கள் துப்பாக்கிகளையும் கத்திகளையும் ஏந்திச் சென்ருர்கள். மார்க்சிஸ்டுகளையும் ஆதரவாளர்களையும் சுமார் ஆயிரம் பேர் வரை படுகொலை செய்தார்கள்.

வாக்குச் சாவடிக்குள்ளிருந்து மார்க்சிஸ்ட் வேட்பாளர்களின் ஏஜெண்டுகளை துப்பாக்கியைக் காட்டி விரட்டியடித்தார்கள். வாக்காளர்களையும்வாக்களிகக விடாமல் விரட்டியடித்தார்கள். ஜோதிபாசு போன்ற தலைவர்கள் கூட தமது தொகுதிக்குள் நுழைய முடியாதபடி அட்டகாசம் செய்தார்கள். வாக்குச் சாவடிகளைக் கைப்பற்றி, வாக்குச் சீட்டுகளில் காங்கிரஸ் சின்னங்களையே முத்திரையிட்டுக் கொண்டார்கள்.

இவையெல்லாம் உலகறிந்த விஷயம் தான் என்ருலும் அன்று பலரும் நம்ப மறுத்தனர்.

### மோசடி தேர்தல் என்று பத்திரிகைகள் ஒப்பின

ஆனல் கடந்த ஓராண்டு காலத்தில் 'டைம்ஸ் ஆப் இந்தியா' பத்திரிகையும், ஸ்டேட்ஸ்மென், இந்துஸ்தான் டைம்ஸ், இந்து, இந்துஸ்தான ஸ்டாண்டர்டு, இந்தியன் எக்ஸ்பிரஸ் முதலான தேசீயப் பத்திரிகைகளெல்லாம், மேற்கு வங்கத்தில் நடந்த தேர்தலை மோசடித் தேர்தல்தான் என்று பகிரங்கமாக ஒப்புக் கொண்டு எழுதுகின்றன.

தேர்தலில் காங்கிரஸ் கட்சி தோற்றுப் போகும் என்ற நிலை ஏற்பட்டால் 1972ல் மேற்கு வங்க சட்ட மன்றத் தேர்தலில் எவ்வாறு தாக்குதல்களிலும் மோசடிகளிலும் ஈடுபட்டதோ அதே முறையை இதர எல்லா மாநிலங்களிலும் ஆளும் காங்கிரஸ்கையாளுவதற்கு தயங்காது' என்று கூறினர்.

### ஒரு கட்சிசர்வாதிகாரம்

ஒரு கட்சி சர்வாதிகாரத்தை நோக்கி காங்கிரஸ் கட்சி எவ்வாறெல்லாம் நகர்கிறது என்பதைப்பற்றியும் பி. ராமமூர்த்தி விவரித்தார்.

"இந்திய-பாகிஸ்தான் யுத்தம் முடிந்து 4 ஆண்டுகள் ஆகிவிட்டன. இவ்வளவு காலமாகியும்கூட யுத்தகால அவசர நிலையை இன்னும் நீடித்துக் கொண்டிருப்பதும ஒரு கட்சி சர்வாதிகாரத்தை ஏற்படுத்துவதற்காகத்தான்.

3000க்கு மேற்பட்ட எங்கள்தோழர்களை 4 ஆண்டுகளுக்கு மேலாக விசாரணையின்றி சிறையில்அடைத்திருப்பதுமஇதற்காகத்தான்.

மேற்கு வங்கத்தின் அடக்குமுறைகள், இப்பொழுது ஒவ்வொரு மாநிலத்திலும் பரவிக்கொண்டிருக்கிறது.

எனவே, தன்னுடைய லட்சியமாகிய ஒரு கட்சி சர்வாதிகாரத்தை நிலைநாட்டுவதற்காக, மேலும் மேலும் பாசிஸ்ட் பாதையில் போவதுதான இன்று நாட்டின் முன்னுள்ள பேராபத்தாகும்"—என்று நாட்டு மக்களுக்கு எச்சரிக்கை விடுத்தார்.



### ஜனநாயகவாதிகளே தடுத்து நிறுத்த வருக!

வாக்காளர்களின் வாக்களிக்கும் உரிமையைக் கூட குண்டர்களைக் கொண்டு பறிப்பது, பாசிஸத்துக்கு அறிகுறியாகும்.

"மக்களின் உரிமைகள் படிப்படியாக பறிக்கப்பட்டு வருகின்றன.

இந்தப் போக்கைத் தடுத்து நிறுத்துவதுதான், ஜனநாயக எண்ணம் சிறிதேனும் உள்ளவர்களின் முதற்பெரும் கடமையாகும்" என்று வற்புறுத்தினர்.

ஆளும் காங்கிரசின் இந்தப் போக்கைத் தடுத்து நிறுத்துவதற்கு கட்சியின் தமிழ் மாநில செயற்குழு கட்சியின் மத்தியக் கமிட்டிக்கு சில யோசனைகளைக் கொடுத்திருக்கிறது"— என்றும் ராமமூர்த்தி கூறினர்.

பிறகு நிருபர்கள், தேர்தல் பற்றி கேள்விகள் கேட்டனர்.

அதற்கு பி ராமமூர்த்தி, "தேர்தல்கள் என்பது சாதாரண விஷயம். இந்தப் போக்கைத் தடுத்து நிறுத்துவது தான் ஒவ்வொருவரின் முதற்பெரும் கடமை. ஆகவே, அதில்தான் செயற்குழு தன் முழுக் கவனத்தையும் செலுத்தியது"— என்ருர்.

மற்றும், மாநில அரசும் மத்திய அரசும் தமிழ் நாட்டில் வறட்சியால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு போதிய, நிவாரணமளிக்க போதிய நடவடிக்கை எடுக்காமலிருப்பது குறித்தும் வருத்தம் தெரிவித்தார்.

---

தண்ணீர்ப் பஞ்சத்தை எதிர்த்து

## காலிக் குடங்களுடன் ஆர்ப்பாட்டம்

### மாதர் சங்கம் அறைகூவல்

மதுரை, பிப். 20—

தண்ணீர்பபஞ்சத்தை எதிர்த்து, குடிநீர்வசதிகள் கோரியும் தமிழகம் முழுவதும் மார்ச் 10-ந் தேதியன்று மாநகராட்சி, நகராட்சி அலுவலகங்கள் முன்புகாலி குடங்களுடன் பெண்கள் ஆர்ப்பாட்டங்கள் நடத்துகிருர்கள்.

அண்மையில் சோழவந்தானில் நடந்த தமிழக மாதர் சங்க நிர்வாகக் குழு கூட்டத்தின் இறுதியில் விடுக்கப்பட்ட அறைகூவலுக்கு இணங்க இந்த காலிக்குட ஆர்ப்பாட்டம் நடக்கிறது.

இந்த ஆர்ப்பாட்டத்தின் போது ஆழ்கிணறு தோண்டுதல், போரிங் குழாய்கள் அமைத்தல் முதலிய கோரிக்கைகள் வற்புறுத்தப்படும்.

### ஒரிசா டாக்டர்கள் போராட்டம்

கட்டாக், பிப். 19—

ஒரிசா மாநில அரசு மருத்துவமனை டாக்டர்கள் அனைவரும் 2 நாட்களுக்கு மொத்தமாக லீவு எடுக்கும் போராட்டத்தை ஆரம்பித்துள்ளனர். இப்போராட்டத்தை இன்றிலிருந்து துவங்கியுள்ளனர்.

ஐஏஎஸ் அதிகாரிகளுக்கு இணையாக சமபளம்கொடுக்கப்பட வேண்டும் முதலிய கோரிக்கைகளை வற்புறுத்தியே இப்போராட்டத்தை ஆரம்பித்துள்ளனர்.

இப்போராட்டத்திற்கு ஒரிசா மருத்துவ ஊழியர் அமைப்பு அறைகூவல் விட்டுள்ளது.

### போலீசின் துப்பாக்கிச் சூடு 3 ஆதிவாசிகள் பலி

அகமதாபாத் பிப் 19—

குஜராத் மாநிலத்தில் காலியா என்னும் கிராமத்தைச் சார்ந்த ஆதிவாசி மக்கள் மீது துப்பாக்கிச் சூடு நடத்திய மத்திய ரிசர்வ் போலீஸ் 3 பேரின் உயிரை குடித்து விட்டது.

பனச்சமஹால் என்னும் மாவட்டத்தின் எல்லையில் உள்ள அக்கிராம ஆதிவாசிகள் மீது கும்பலாகச் சென்ற மத்திய ரிசர்வ் போலீஸ் தாக்குதல் நடத்தியது. இதனல் ஆதிவாசிகளும் தற்காப்பின் பேரில் போலீசோடு மோதினர். அம்மோதலில் அம்புகளைப் பயன்படுததினர்.

மத்திய ரிசர்வ் போலீஸ் கண் மூடித்தனமாக துப்பாக்கிச் சூடுகளை நடத்தி 3 உயிர்களை சுட்டுக் கொன்றது. பலர் படுகாயமடைந்தனர். ஆதிவாசிகளின் அம்புத்தாக்குதலுக்கும் 12 போலீசார் உள்ளாகி காய மடைந்தனர்.

(2-ம் பத்தி தொடர்ச்சி)

நாயர் என்னும் வக்கீலை, சப் இன்ஸ்பெக்டர் கீழ்த்தரமாக பேசி தாக்குதலையும தொடுத்துள்ளாராம.சப்-இன்ஸ்பெக்டரின் தாக்குதலால் காயமடைந்த வக்கீல் ஆஸபத்திரியில் அனுமதிக்கப்பட்டுள்ளாராம்.

போலீசின் தாக்குதலைக் கண்டித்து நடத்தப்பட்ட ஊர்வலததுக்கு வககீல் சங்க தலைவர் ஹரேந்திரன் நாயர் சமீபகாலங்களில் வக்கீல்கள் மீது போலீசாரின் தாக்குதல் அதிகரித்துள்ளது என்றும் வக்கீலைத்தாக்கிய போலீஸ் அதிகாரியை சஸ்பெண்ட் செய்யவேண்டுமென்றும் அங்நிகழ்ச்சியின் மீது விசாரணை நடத்த வேண்டும் என்றும் அவர் கேட்டுக்கொண்டார்.

## பி.ராமமூர்த்தி நிகழ்ச்சிகள்

பிப். 22 முகவை மாவட்ட வறட்சிப் பகுதிகளில் சுற்றுப்பயணம்

மாலை காரைக்குடி கல்லூரியில் சொற்பொழிவு

இரவு —காரைக்குடி —பொதுக்கூட்டம்

" 23. மதுரை

" 24. திருக்கடையூர்(மாயூரம் தாலுகா)

" 25. கீழையூர்(நாகை)

ஊட்டியாணி(மன்னை)

திருக்கண்ணமங்கை(நன்னிலம்)

## பிரதமர் வீட்டுமுன் ஆர்ப்பாட்டம்

### எஸ். எப். ஐ. மாணவர்களை சந்திக்க பிரதமர் மறுப்பு

புதுடெல்லி, பிப். 20—

பிரதமர் வீட்டு முன்னல் மறியல் செய்ய, டில்லியிலிருந்தும், உத்தரப்பிரதேசத்திலிருந்தும் மாணவர்கள் வந்தனர். அந்த மாணவர்கள் தங்கள் கோரிக்கை மகஜரை அளிக்க பிரதமர் வீட்டுக்குச் சென்ற போது, அவர்களைச் சந்திக்க பிரதமர் மறுததுவிட்டார்.

இது பற்றிய விவரமாவது:—

இந்திய மாணவர் சங்கத்தின அறைகூவலுக்கு இணங்க நாடெங்குமுள்ள மாணவர்கள் சென்ற பிப்ரவரி 14ந் தேதி கோரிக்கை தினம் அனுஷ்டித்தனர். மதுரையிலும் எஸ் எப் ஐயைச் சேர்ந்த மாண்வர்கள் ஆர்ப்பாட்டம் நடத்தியது தெரிந்ததே.

இதே போன்று டில்லியிலுள்ள மாணவர்களும், உத்தரப்பிரதேசத்திலுள்ள மீரட், மொராதாபாத், மதுரா, ஆக்ரா, டெல்லி, பல்கலைக் கழக மாணவர்கள், நேரு பலகலைக் கழக மாணவர்கள் ஆகியோர் ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

டெல்லியிலுள்ளராமலீலா மைதானத்திலிருந்து ஊர்வலமாகப் புறப்பட்ட இந்த மாணவர்கள் ஊர்வலததில் மாணவிகளும் கலந்து கொண்டனர். ஊர்வலம பூராவும், கல்விச் சீர்திருத்தம பற்றிய அவர்களுடைய கோரிக்கை அடங்கிய அட்டைகளை ஏந்தியும், கோஷம் போட்டுக் கொண்டும் மாணவர்கள் சென்றனர்.

5000 பேர் கையெழுத்திட்ட மாணவர்களின் மகஜரை பிரதமரிடம் அளிப்பதற்கு, சென்றவர்களிடம் பிரதமருக்கு உடல் நலமில்லை என்று காரணம் கூறி அனுமதி மறுத்துவிட்டனர்.

ஆனல் அதே நேரத்தில் டெல்லி பல்கலைக் கழக மாணவர்களும், அந்தக்கழக உதவித் துணை வேந்தரும் பிரதமரோடு பேசி, மாணவர்களைக் காங்கிரஸ் உறுப்பினராக்குவது பற்றி உரையாடிக் கொண்டிருந்தனர்.

பிரதமர் வீட்டுக்கு சில பர்லாங் தூரத்தில் ஊர்வலம் நிறுத்தப்பட்டது.

தோழர்கள் பிரகாஷ் காரத், பிரிதிவிசிங், சுநீத் சோப்ரா ஆகியோர், பிரதமருடைய காரியதரிசியிடம் மகஜரைக் கொடுக்கச்சென்றனர்.

அதன்பின்நடந்த பேரணியில், எஸ்எப்ஐயின் மத்திய கமிட்டி உறுபபினர்களான தோழர்கள் பிரகாஷ்காரத், பிரிதிவிசிங், சுநீத் சோப்ரா, தேவி பிரசாத்திரிபாதி (நேரு பல்கலைக்கழக மாணவர் சங்கத் தலைவர்] ஆகியோர் மாணவர்களின் ஜனநாயக இயககத்தையும், கல்விச்சீர் திருத்தம் பற்றியகோரிக்கைகளையும விளக்கிப் பேசினர்.

## போலீஸ் அடக்குமுறை வக்கீல்கள் கண்டன ஊர்வலம்

திருவனந்தபுரம், பிப், 19—

வக்கீல் ஒருவரை போலீஸ் அதிகாரிகள் தாக்கியதைககண்டித்து கோர்ட்டுகளை பகிஷ்காரம செய்யும் போராட்டத்தை திருவனந்தபுர வக்கீல்கள் மேற்கொண்டனர்.

வக்கீல் ஒருவர் தாக்கப்பட்டதை அறிந்தவுடன் வக்கீல்கள் கோர்ட்டுகளை விட்டு வெளியேறி வீதிகளில் ஊர்வலமாகச் சென்றனர். போலீசின் அடக்குமுறைகளை கண்டித்து கோஷமிட்டனர். ஊர்வலம் அரசு தலைமையலுவலகத்தை அடைந்தது. முதலமைச்சரும் உள்துறை அமைச்சரும் தலைமை செயலகத்தில் இல்லாததால், போலீசின் அடக்குமுறையைக் கண்டிக்கும் மகஜர் ஒன்றை தலைமை செயலாளரிடம் அளித்தனர்.

போலீசாரால் ஸ்டேஷனுக்கு அழைத்துச் செல்லப்பட்டவரை மீட்கச் சென்ற வெங்கனூர் சந்திரசேகரன்

(2-ம் பத்தி பார்க்க)

தீக்கதிர்

## ஹரியானவில் காங்கிரஸ்தோல்விகள் காட்டுவதென்ன

அண்மையில்தான் ஜபல்பூர் பார்லிமெண்டு தொகுதியில் [மத்திய பிரதேச மாநிலத்தில்] நடந்த இடைத் தேர்தலில் காங்கிரஸ் கட்சிக்கு மிகப் பெருந்தோல்வி ஏற்பட்டது. இதைத் தொடர்ந்து ஹரியான மாநிலத்தில் நடந்த மூன்று சட்டசபைத் தொகுதி தேர்தல்களில் இந்த வாரம் மூன்றில் இரண்டு தொகுதிகளைக் காங்கிரஸ் இழந்துவிட்டது. இவற்றில் காங்கிரஸ் செல்வாக்கு முக்கியமான தெனக் கருதப்பட்ட "ரோரி" தொகுதியில் காங்கிரஸ் வேட்பாளர் 16478 வோட்டுகள் வித்தியாசத்தில் தோற்கடிக்கப்பட்டார். காங்கிரஸ் வென்ற "நூ" தொகுதியில் முஸ்லீம் வோட்டர்கள் கணிசமாக உள்ளனரென்றும், அங்கு "மியோ" ஜாதியைச் சேர்ந்த இரு முக்கிய கோஷ்டிகள் காங்கிரசை ஆதரிக்கப் பாடுபட்டிராவிடில் அந்தத்தொகுதியிலும் காங்கிரஸ் தோல்வி கண்டிருக்கு மென்றும் கூறப்படுகிறது.

ஆனால் ஹரியான தேர்தல் முடிவுகள் ஒருவிஷயத்தை மேலும் ஊர்ஜிதப்படுத்துகின்றன.

1971-ம் வருடத்தில் காணப்பட்ட "இந்திரா அலை" ஓய்ந்துவிட்டது.மாறாக, "இந்திரா எதிர்ப்பு அலை' தான் இப்போது எங்கும் வேலைசெய்யத் துவங்கிவிட்டது.

இந்தி மொழி பேசும் மாநிலங்களில் இந்திராகாங்கிரஸ் பலமாக இருக்கிறதென்று ஒரு அபிப்பிராயம் நாட்டில்நிலவி வந்தது பீகார், உத்தரபிரதேசம், மத்தியபிரதேசம்போன்ற இந்தி மொழி மாநிலங்களில் காணப்படும் காங்கிரஸ் எதிர்ப்புணர்ச்சி இப்போது ஹரியான மாநிலத்தையும் ஆட்கொண்டுள்ளது என்பது இன்று தெளிவாகிறது.

இந்த மூன்று சட்டசபைத் தொகுதிகளும், நகரப்புறத் தொகுதிகளல்ல, கிராமப் பிரதேசத் தொகுதிகள். அரிஜனங்களின் வோட்டுகள் முன்போலின்றி காங்கிரசுக்கு கிடைக்கவில்லை என்றும் தெரிகிறது. டெல்லியை அடுத்துள்ள ஒரு மாநிலத்தில் காங்கிரஸ் கட்சியும் மத்திய காங்கிரஸ் சர்க்காரும், மாநில காங்கிரஸ் சர்க்காரும், விசேஷமாகக் கவனித்து நிறைய பணச் செலவு செய்துள்ள ஒரு மாநிலத்தில் காங்கிரசுக்கு கிடைத்துள்ள இந்த அடி காங்கிரஸ் முகாமைநிச்சயம்கதிகலங்கவைத்திருக்கும்

கடந்த 2, 3 வருடங்களாய் காங்கிரஸ் ஆட்சியின் கொள்கைகளும் நடைமுறைகளும் மக்களின் எதிர்ப்பைத் திரட்டியுள்ளது. காங்கிரஸ் கட்சியின் ஏகபோக உரிமை என்று கருதப்பட்ட ஒரு மாநிலத்திலேயே காங்கிரஸ் கட்சி மண் கவ்வ நேரிட்டுள்ளது.

பீகார் நிலைமையைப் போல் ஹரியான நிலைமை இன்னும் இல்லாமலிருக்கலாம். ஆனால் பீகார் நிகழ்ச்சிகள், அங்கு காங்கிரசை எதிர்த்து நடைபெறும் இயக்கங்கள், நிச்சயம் ஹரியான மாநில மக்களையும ஈர்த்திருக்கின்றன.

இந்திரா காங்கிரசுக்கும் அதன் கொள்கைகளுக்கும் நாடெங்கும் நாளுக்கு நாள் எதிர்ப்பு அதிகரித்து வரும் என்பதையே ஹரியான தேர்தல் முடிவுகளும் சுட்டிக் காட்டுகின்றன.

---

அரசு ஊழியர் பஞ்சப்படி

## கேரள அரசு முடிவின் மீது நடவடிக்கைகவுன்சில் அதிருப்தி

திருவனந்தபுரம் பிப் 19— போராட்டத்தில் ஈடுபட்டுள்ள கேரள மாநில அரசு ஊழியர்களுக்கு, மத்திய அரசு ஊழியர்களுக்கு இணையான பஞ்சப்படியை தருவதாக அம்மாநில முதலமைச்சர் அச்சுதமேனன் ஒப்புக் கொண்டார். ஆனல் இப்பஞ்சப்படியை 3 தவணையாக தர இருப்பதாகவும கூறினர்.

இதனை இன்று இங்கு நிருபர்களிடையே தெரிவித்தார்.

மேலும், அரசு ஊழியர்களின் கோரிக்கைகள் போராட்டங்கள் பற்றி அரசு உறுதியான நிலையை எடுக்கும் என மிரட்டிய அச்சுதமேனன் அரசு ஊழியர்களின் பல்வேறு ஸ்தாபனங்கள் கிளப்பிய கோரிக்கைகளை பரிசீலனை செய்யும் வேலையைத் தவிர வேறு எந்த வேலையையும் கவனிக்க முடியவில்லை என்றும் ஒப்புக் கொண்டார்.

அச்சுதமேனனின் இவ்வுறுதி மொழியின் பேரில் அரசு ஊழியர்களின் மிகச் சிறுபான்மையினரை பிரதிநிதித்துவப்படுத்தும் மாநில அரசு ஊழியர் அமைப்பின் கூட்டுக் கவுன்சில் தனது வேலைநிறுத்த அறைகூவலை வாபஸ் பெற்றுக் கொண்டது.

ஆனல்கேரள அரசு எடுத்துள்ள முடிவுக்கு மாநில ஊழியர் கூட்டு நடவடிக்கை கவுன்சில் கண்டனம் தெரிவித்துள்ளது.

அக்கவுன்சிலின் கன்வீனர்களான இ. பத்மநாபனும், கருணாகரனும் வெளியிட்ட கூட்டறிக்கையொன்றில் மாநில அரசு ஊழியர்களுக்கு பஞ்சப்படியை 1974ம் ஆண்டு ஜுன்,ஜுலை மாதத்திலிருந்து கொடுப்பதற்கு பதிலாக 75ம் ஆண்டின் ஏப்ரல் மாதத்திலிருந்து கொடுப்பதன் மூலம் 13 கோடி ரூபாய் வரைக்கு மாநில அரசு ஊழியர்களை கேரள அரசு கொள்ளையடிக்கிறது எனக் குற்றம் சாட்டினர்.

---

## வேலப்பன் மீண்டும் அ தி மு க வில்

சென்னை, பிப். 19— அந்தரத்தில் ஆடிக் கொண்டிருந்த வேலப்பன் என்ற எம். எல். ஏ. கடைசியாக அ. தி. மு. க. வில் அதன் பொதுச் செயலாளர் எம். ஜி, ராமச்சந்திரனல் சேர்த்துக் கொள்ளப்பட்டார்

1972-ம் ஆண்டு தி. மு. க. விலிருந்து அ. தி, மு. க. பிரிந்தபோது அதில் சேர்ந்தார் வேலப்பன். பின்பு மீண்டும் 1974-ம் ஆண்டு நவ,4ல் தி மு க விற்கு பாய்ந்தார். 18 நாட்கள் அக்கட்சியில் இருந்த வேலப்பன் மீண்டும் அ தி மு க விற்குபாய்ந்தார். தி மு க தலைவர்களின் மன நிலைகளை அறியவே தி மு க காரராக 18 நாட்கள் நடித்ததாக கூறினர்.

இச்சமயம் அ தி மு க வின் பொதுச்செயலாளர் எம் ஜி ராமச்சந்திரன் அமெரிக்கா போயிருந்தார். வேலப்பன் போன்றவர்களுக்கு மீண்டும் அ தி மு க வில் இடமில்லை எனக்கூறி வேலப்பனை, அமெரிக்காவிலிருந்து திரும்பிய எம் ஜி ஆர் சேர்த்துக் கொள்ள மறுத்துவிட்டார்.

அதே நிலையை தி மு க வும் எடுத்தது.

எக்கட்சியிலும் சேரமுடியாத திரிசங்கு நிலையை அடைந்தார் வேலப்பன்.

ஆனல் இன்று வேலப்பன்

(8-ம் பத்தி பார்க்க)

---

வறட்சி நிவாரண நடவடிக்கைகளில்

# மாநிலங்களுக்கு உதவிசெய்வதில் பாரபட்சம் ஏன்?

## மத்திய அரசுக்கு தமிழக சி.ஐ.டி.யூ. கண்டனம்

நெல்லிக்குப்பம், பிப்.20— வறட்சி நிவாரணநடவடிக்கைகளுக்காக, மாநிலங்களுக்கு நிதி ஒதுக்குவதில் மத்திய காங்கிரஸ் அரசு அரசியல் நோக்கத்துடனும் பாரபட்சத்துடனும் செயல்பட்டு வருகிறது என்று தமிழக சிஐடியூ கண்டனம்தெரிவித்துள்ளது.

இதுகுறித்து,கடந்த 15,16 தேதிகளில் இங்கு கூடிய சிஐடியூ தமிழ் மாநிலக்குழுக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம் வருமாறு:— தமிழ்நாட்டில் என்றும் கண்டும் கேட்டுமிராத அளவு கடுமையானவறட்சி ஏற்பட்டுள்ளது. மதுரை இராமநாதபுரம், கோவை, செங்கல்பட்டு, புதுக் கோட்டை மாவட்டங்களில் பல பகுதிகளில் மக்கள் குடிக்க கஞ்சியும், குடிநீரு மற்று பரிதவிக்கின்றனர். இதில் உடனடியாக தமிழக அரசும், மத்திய அரசும் தலையிட்டு உருப்படியான நிவாரணம் அளிக்க மறுத்து வருவதை இக்கூட்டம் வன்மையாக கண்டிக்கிறது.

மத்திய அரசானது இந்த வறட்சி நிலையை அவசர உணர்வுடன் கவனித்து நிவாரணத் தொகை அளிப்பதிலும் உணவு தான்ய கள் சப்ளை செய்வதிலும் அசிரத்தை காட்டுவதையும், காலம் கடத்துவதையும் இக்கூட்டம் வன்மையாக கண்டிக்கிறது.

### அரசியல் நோக்கம்

பீகார் மாநிலத்தில் நிதிக் கமிஷன் ஒதுக்கிய தொகைக்கு மேல் ரூ. 40 கோடி 'ஓவர் டிராப்ட்' பெற்றிட மத்திய அரசு விசேஷ அனுமதி வழங்கி, பின்னர் அதை திரும்பப்பெற முடியாத பணம் என்று தள்ளி விட்டது.

உத்திரபிரதேசத்தில் தேர்தல் காலத்தில் மத்திய அரசு தலையிட்டு மாநில வளர்ச்சித் திட்டத்தில் இல்லாத புதிய தொழில்களை ஆரம்பிக்க என்று பாரத் ஹெவி எலெக்ட்ரிகல்ஸ் லிமிடெட் என்ற நிறுவனத்தின் மூலம் ரூ 90 கோடிக்கு இயந்திரங்களைக் கொடுத்து அதன் பொறுப்பை மத்திய அரசே ஏற்றுக் கொண்டது

இவ்வாறு தன் கட்சி அரசுகளுக்கு பீகார், உத்திரபிரதேசத்தில் ஏற்பட்ட நெருக்கடிகளை சமாளிக்க ஏராளமான கோடி ரூபாய்களை அரசியல் நோக்கத்துடன் செலவழிக்க மத்திய காங்கிரஸ் அரசு முன் வரும் பொழுது, தமிழ் நாட்டில்— காங்கிரஸ் அல்லாத ஆட்சியில்—வறட்சியால் மக்கள் செத்துக் கொண்டிருக்கும் பொழுது உதவ மறுப்பதை இக்கூட்டம் கண்டிக்கிறது. உடனே முழு நிவாரணத்துக்கு மத்திய அரசு பணமும் தானியமும் ஒதுக்க வேண்டுமென இக்கூட்டம் வற்புறுத்துகிறது.

### மக்கள் கமிட்டிமேற்பார்வை

தமிழக அரசு அரிசி மொத்த வியாபாரம் முழுவதையும் ஏற்றெடுத்து நிலப் பிரபுக்களிடமுள்ள உபரி தானியம் முழுவதையும் கட்டாயக் கொள்முதல் செய்து கட்டாய ரேஷன் மூலம் தமிழக மக்களுக்கு மலிவு விலையில் உணவு தான்யம் கிடைப்பதை உத்தரவாதம் செய்ய வேண்டுமென்றும், கொள்முதல், விநியோகம் ஆகியவை மக்கள் கமிட்டிகளின் மேற்பார்வையில் நடைபெற வேண்டுமென்றும விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்களின் அரசு, கூட்டுறவு, தனியார் கடன் பாக்கிகள் வசூலிப்பதை 3 ஆண்டுகளுக்கு ஒத்திவைக்க வேண்டுமென்றும் இக்கூட்டம் கோருகிறது.

### சிஐடியூ அறைகூவல்

சிஐடியூ தொழிற்சங்கங்கள் அனைத்தும் இந்த வறட்சி நிவாரணப் பணிகளில் முழுப் பங்கெடுக்கவும், கஞ்சித் தொட்டிகள் நடத்தி உடனடி நிவாரணம் வழங்கவும் முன்வர வேண்டுமென்று இக்கூட்டம் அறைகூவல் விடுக்கிறது.

---

## ஒருநாளைக்கு ரூ. கோடிநட்டம்

புதுடில்லி பிப் 19— சணல் தொழிலாளர்களின் வேலை நிறுத்தத்தின் காரணமாக ஒரு நாளைக்கு ஒரு கோடி ரூபாய் நஷ்டம் அடைவதாக மாநிலங்கள் அவையில் வர்த்தக அமைச்சர் சட்டோபாத்யாயா அறிவித்துள்ளார்.

இன்று வேலைநிறுத்தம் 44 நாட்களாக நீடிக்கிறது. 44 கோடி ரூபாய் நட்டம். ஆனலும், தொழிலாளர்களின் உரிமைகளை,கோரிக்கைகளை ஏற்கமாட்டோம் என்று முதலாளிகள் பிடிவாதம் செய்கின்றனர். அவர்களுக்கு ஆதரவாகவே இந்த அரசும செயல்பட்டு வருகிறது.

---

## ஒருநாள் விட்டு ஒருநாள்தான் தண்ணீர்சப்ளையாம்

சென்னை, பிப். 18— சென்னையில் ஒரு நாள் விட்டு ஒருநாள் தான் இனி மேல் தண்ணீர் சப்ளை செய்யப்படுமாம். இத்தகவலை மாநகராட்சி தனி அதிகாரி அறிவித்துள்ளார்.

சென்னை நகரில் குடிநீர்ப் பிரச்னை நாள்தோறும் கடுமையாகி வருகிறது.

---

## சணல் தொழிலாளர் வேலைநிறுத்தம்தொடர்கிறது

கல்கத்தா, பிப். 9— 44 நாட்களுக்குமுன்பு துவங்கிய இரண்டரை லட்சம் மேற்கு வங்க சணல் தொழிலாளர்களது பொது வேலை நிறுத்தம் தொடர்ந்து நீடிக்கிறது.

பல்வேறு கட்டப் பேச்சு வார்த்தைகள் நடந்தும், அரசும் சணல் முதலாளிகளும் தொழிலாளர்களது கோரிக்கை சம்பந்தமாக சிறிதும் இணங்கிவராமல் அடம் பிடித்ததால், எவ்வித முடிவும் ஏற்படாமல் வேலைநிறுத்தம் தொடர்கிறது.

---

பழனிதாலுகாபாப்பம்பட்டியில்

## 500 குடும்பங்கள் வெளியேறின

பழனி தாலுகா, பாப்பம்பட்டி நஞ்சை பகுதியாகும். இவ்வாண்டின் வறட்சியால்,இங்கு பயிரிட்ட நெல் பாதிகூட அறுவடை இல்லை. சோளம், சாமை, மக்கா சோளம், பருத்தி, கரும்பு, கொல்லு, கடலை இவைகளில் கிணற்றுப்பாசனம்இருந்தவர்களுக்கு பாதி சாகுபடிகூட தேரூது.

இங்கு சுமார் 3600 குடும்பங்கள் இருக்கிறது. இதில் 2000 குடும்பங்கள் வரை, விவசாயக் கூலிகளாக வாழ்பவர்கள். இவர்களுக்கு வேலை இல்லை — எத்தனை நாளைக்குப் பட்டினியுடன் வாழ்வார்கள்?

எனவே காக்கை, குருவிகளைப் போல், விளைந்த காடு தேடிப் போவது என்று முடிவு செய்தார்கள். உடுமலைதாலுகா தும்பலபட்டி, கல்லாபுரம் பகுதிகளுக்கு ஏற்கனவே 500 குடும்பங்கள் வெளியேறி விட்டன,

இந்த வெளியேற்றத்தைத் தடுக்க வறட்சிப்பணியாக, இப்பகுதியில் உள்ள எல்லா குளங்களையும், தூர் எடுத்து கரைபோடும் வேலையை துரிதமாக செய்வதோடு, இங்கு திட்டமிடப்பட்ட, குதிரையாறு அணைக் கட்டுவேலையையும் துரிதமாகச்செய்ய வேண்டும் என்று தாலுகா மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் தோழர் ஏ எஸ் காளிமுத்து கோரியுள்ளார்.

---

அதிகாரிகள் கிளர்ச்சி — ஊழியர்கள்ஸ்ட்ரைக்

## ஸ்டேட் பாங்க் ஸ்தம்பித்தது

பம்பாய், பிப். 19— கடந்த 17-ந் தேதி துவங்கிய நான்காம்தர ஊழியர்களின் வேலை நிறுத்தத்தின் காரணமாக இங்கு ரிசர்வ் பேங்க் மற்றும் அதுதொடர்பான நிறுவனங்களின் வேலைகள் ஸ்தம்பித்துள்ளன.

துப்புரவுப் பணிகளுக்குத் தங்களைப் பயன் படுத்தக் கூடாது என்ற கோரிக்கையை முன் வைத்து இந்த வேலை நிறுத்தம் நடக்கிறது.

ஏற்கனவே, கடந்த 9 நாட்களாக கிராக்கிப்படி முதலிய கோரிக்கைகளை வற்புறுத்தி இந்த வங்கியின் அதிகாரிகள் இந்தியா முழுவதும் விதிப்படி வேலை கிளர்ச்சி நடத்தி வருகின்றனர்.

இதனல் 20 கோடி ரூபாய் மதிப்புள்ள 'செக்கு'கள் மாற்றப்பட முடியவில்லை என்று அதிகாரிகள் சங்கச் செயலாளர் அறிவித்துள்ளார்.

---

## எகிப்துக்கு சோவியத் மீண்டும் ஆயுத சப்ளை

நியூயார்க், பிப் 19— எகிப்துக்கு சோவியத் யூனியன் மீண்டும் ஆயுத சப்ளை செய்யத் துவங்கியிருப்பதாக 'நியூஸ் வீக்' என்ற பத்திரிக்கை, செய்தி வெளியிட்டுள்ளது.

கடந்த ஆண்டு ஏப்ரலில் எகிப்துக்கு ஆயுத உதவியை சோவியத் யூனியன் நிறுத்தியிருந்தது.

---

(2-ம் பத்தி தொடர்ச்சி)

மீண்டும் அ தி மு க வில் சேர்த்துக் கொள்ளப்படுவதாக முதலில் சேர்க்கமறுத்த எம் ஜி ஆர் அறிவித்துள்ளார். இது சம்பந்தமான அறிக்கையொன்றை எம் ஜி ஆர் வெளியிட்டுள்ளார்.

அ தி மு க வுக்கு தனது உண்மையான அன்பை வேலப்பன் உறுதி செய்துள்ளாராம். கடந்த காலத்தில் அ தி மு கவை கட்டுவதில் வேலப்பன் கடுமையாக உழைத்துள்ளாராம். இதனை எம் ஜி ஆர் தனது அறிக்கையில் கூறியுள்ளார்.

---

## கல்லூரிகளில் வயிற்றுப்போக்கு மருத்துவமனையில் மாணவர்கள் அனுமதி

மதுரை, பிப். 19— வயிற்றுப்போக்கு காரணமாக மதுரை மருத்துவக் கல்லூரி, அமெரிக்கன் கல்லூரி ஆகியவற்றைச் சார்ந்த சுமார் 200 மாணவர்கள் பாதிக்கப்பட்டுள்ளார்கள்.

மருத்துவக் கல்லூரியில் 50 பேர் பாதிக்கப்பட்டுள்ளனர். மருத்துவக் கல்லூரி மாணவர்களும், பயிற்சி டாக்டர்களுமாக (ஹவுஸ் சர்ஜன்கள்) சுமார் 20 பேர் மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வருகின்றனர்.

அமெரிக்கன் கல்லூரியில் உள்ள வாஸ்பர்ன், ஜம்புரோ ஆகிய விடுதிகளில் உள்ள சுமார் 150 மாணவர்கள் வயிற்றுப் போக்கால் பாதிக்கப்பட்டுள்ளனர். இவர்களுக்கு சிகிச்சை அளிக்க தீவிரமான நடவடிக்கை எதுவும் எடுக்கவில்லை என்று சொல்லப்படுகிறது.

### காரணம் என்ன?

கல்லூரி விடுதிகளில் உணவு முறைகளில் திடீரென மாற்றம் செய்யப்பட்டதுதான் இதற்குக் காரணம் என்றும், எனவே,இது சம்பந்தமாக மாவட்ட சிவில் சப்ளை அதிகாரிகளும், சுகாதார அதிகாரிகளும தலையிட்டு தக்க நடவடிக்கைகள் எடுக்கவேண்டும் என்றும் மாணவர்கள் கோருகின்றனர்.

---

## மின்வாரியத்தில் புகார்கள் தூங்குகின்றன நடவடிக்கை எடுக்காவிடில் போராட்ட எச்சரிக்கை

விழுப்புரம், பிப். 19— தென்னுற்காடு மாவட்டத்தில் மின்வாரியத்தில் பணிபுரியும் சி ஐ டி யூ தோழர்கள் மீது வலது கம யூனிஸ்ட் சார்பான சம்மேளனத்தைச்சார்ந்தவர்களும் வெளியாட்களும் வன்முறை தாக்குதல் நடத்தி வருகின்றனராம். இது சம்பந்தமாக காவல்துறை அதிகாரிகளிடமும் மின வாரிய அதிகாரிகளிடமும் பல புகார் மனுக்கள் கொடுத்தும் இதுவரை எவ்வித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை.

எனவே இனியும் நடவடிக்கை எடுக்காவிடில் போராட்டத்தில் இறங்க நேரிடும் என்று கடந்த 8-ந் தேதி இங்கு கூடிய தென்னுற்காடு மாவட்ட மின் தொழிலாளர் சங்கம் [சி ஐ டி யூ) எச்சரிக்கை விடுத்துள்ளது.

முதல் கட்டமாக திண்டிவனம் கோட்டப்பொறியாளர், நெல்லிக்குப்பம் உதவி பொறியாளர் ஆகியோரது அலுவலகங்கள் முன்பு 25-ந் தேதி முதல் தொடர் உண்ணாவிரதம் மேற்கொள்ளப் படுகிறது.

ஜன 21-ல் நடந்த தர்ணா போராட்டத்தில் கலந்து கொண்டவர்களுக்கு அன்றைய ஊதியம்பிடித்தம்செய்யப்பட்டுள்ளதற்கும கண்டனம் தெரிவிக்கப்பட்டது.

---

## நிர்வாகிகள் தேர்வு

### சுகாதார தொழிலாளர் சங்கம்

கடந்த 6-ந் தேதி தோழர் எஸ் எம் நாகன் தலைமையில் நடந்த கண்ணமங்கலம் (வ ஆ) பஞ்சாயத்து சுகாதாரத் தொழிலாளர் சங்கப் பேரவையில் புதிய நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தலைவராக வி தட்சிணமூர்த்தி, துணைத் தலைவராக கே பி இராசு, செயலாளர் —பொருளாளராக கே ஏ ரஹ்மான் சாயபு ஆகியோரும மற்றும் 5பேர் நிர்வாகக் குழு உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### காஸ்ட்ரோ படிப்பகம்

4-ந் தேதி மதுரைஅண்ணுத் தோப்பில் காஸ்ட்ரோ படிப்பகத் துவக்க விழா நடந்தது.

இப்படிப்பகத்தின் தலைவராக வி செல்லம், உபதலைவராக எஸ் பி ஏ கிரி, செயலராக ஆர் துரைபாண்டி உதவிச் செயலாளராக பி ராதா, பொருளாளராக டி ஆர் நடராஜன் ஆகியோரும் மற்றும 8பேர் நிர்வாகக் குழு உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

அன்று மாலையில் எஸ் பி ஏ கிரி தலைமையில் நடந்த பொதுக் கூட்டத்தில் தோழர் என் சங்கரய்யா செங்கொடி ஏற்றி வைத்துப் பேசினர். மறறும் என். நன்மாறன், பி ராதா ஆகியோரும் பேசினர்.

### தியாகி சுப்பையா படிப்பகம்

மதுரை 16-வது வார்டு தியாகி பூந்தோட்டம் கே சுப்பையா நினைவுப் படிப்பகத்தின் 12-வது ஆண்டு விழாவையொட்டி கடந்த 7-ந் தேதி புதிய நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தலைவராக வி பாஸ்கரன், உதவித் தலைவராக வி செல்லம், செயலாளராக வி கண்ணன், உதவிச் செயலாளராக பி இராசேந்திரன், பொருளாளராக எஸ் பி ஏ கிரி மற்றும் 16 நிர்வாகக் கமிட்டி உறுப்பினர்களும் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

அன்று மாலையில் வி பாஸ்கரன் தலைமையில் நடந்த பொதுக் கூட்டத்தில் என் நன்மாறன் பேசினர். மணவாளன் குழு கச்சேரி நடந்தது. பிற்பகலில் விளையாட்டுப் போட்டிகள் சிறப்பாக நடந்தன.

### அரிசி ஆலை ஊழியர் சங்க நிர்வாகிகள்

மன்னார்குடி, பிப். 19— கடந்த 9-ந் தேதி இங்கு ஆர். சுப்ரமண்யம் தலைமையில் நடந்த தமிழ்நாடு உணவுப் பொருள் வழங்கு கழக நவீன அரிசி ஆலை ஊழியர்கள் சங்கப் பேரவை கூட்டத்தில் புதிய மாநில நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

ஆலோசகராக தோழர் கோ. பாரதிமோகன் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

கு. தென்னன் (தலைவர்) வி. துரைராஜ் (துணைத்தலைவர்) கே. போஸ் (பொதுச் செயலாளர்] ஆர். சந்தான கிருஷ்ணன் (துணைச் செயலாளர்) டி. கோபாலகிருஷ்ணன் (பொருளாளர்] ஆகியோரும் தேர்ந்தெடுக்கப்பட்டனா.

செயற்குழு உறுப்பினர்கள் தென்னன, துரைராஜ் போஸ், ஏ. அசோககுமார, ஆர். சுபரமணயன் ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

---

## கொலைகாரர் முகாமிலே குத்துவெட்டு தொடருது

கல்கத்தா, பிப். 19— காங்கிரஸ் கட்சிக்குள் கோஷ்டிச் சண்டை தீர்ந்தபாடில்லை. சத்திரப் பரீஷத்துக்கும் இளைஞர் காங்கிரசுக்குமிடையே ஒற்றுமை ஏற்படுத்திவிட்டதாக காங்கிரஸ் தலைவர்கள் மகிழ்ச்சியடைந்தார்கள்.

ஆனல், பிப்ரவரி 1-ம்தேதியன்று சந்தன்ராய் என்ற ஆசிரியரை, காங்கிரஸ்அலுவலகத்தில் வைத்து கத்தியால் குத்தினர்கள் இந்த சம்பவம் கூச் பீகாரில் ஹாலிபாரி நகரில் நடைபெற்றது.

இது விஷயமாகக் கைது செய்யப்பட்டவர்களில் சந்தன் பாத்ரா என்ற மாவட்ட காங்கிரஸ் கமிட்டி செயலாளரும் ஒருவர்.

24 பர்கான மாவட்டத்தில் யாராசாத்நகரில் பிப்ரவரி3-ம் தேதி காங்கிரஸ் கோஷ்டிகளுக்குள் அடிதடி ஆரம்பித்தது இருதரப்பிலும் கத்திகள் தாராளமாகப் பயன் படுத்தப்பட்டன.

இந்த மோதலில் சத்ரபரீஷத தலைவன் மாணிக்தத்தா என்பவனுக்கு குத்து விழுந்தது. குததுககாயஙகளுடன் அபாய நிலயில் மருததுவமனையில் கிடக்கிருன்.

இதே அயோக்கியன் மாணிக்தத்தா மீது 3 மார்க்சிஸ்ட் கமயூ. தோழர்களைக் கொலை செய்ததாக ஒரு வழக்கு நடக்கிறது.

---

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6/16 பைபாஸ் ரோடு, மதுரை, 625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே.முத்தையா.

---

இளைஞர் காங்கிரஸ் குண்டர்கள்

## தோழரைத் தாக்கி மகஜரையும் பைலையும் கொள்ளையடித்து சென்ற அக்ரமம்

அண்டால், பிப். 19— மேற்கு வங்க மாநிலத்தில் பர்துவான் மாவட்டத்தில் ஜனநாயக வாலிபர் சங்கத் தோழர் ஒருவரை இளைஞர் காங்கிரஸ் குண்டர்கள் கடுமையாகத் தாக்கிப்படுகாயப் படுத்தியுள்ளனர்.

கடந்த 6-ந்தேதி இரவு 8-30 மணியளவில், டீரேபிள்க் காலனியில் இத்தாக்குதலை நடத்தி விட்டு, அங்கிருந்த வாலிபர் சங்க உறுப்பினர் பைல்கள் சிலவற்றையும், முதலமைச்சரிடம் அளிப்பதற்காக வைத்திருந்த 10 அம்சக் கோரிக்கைகளை வற்புறுத்தும் கோரிக்கை மகஜர்களையும் கொள்ளையடித்து சென்று விட்டனர்.

இதுவும்தவிர, மார்க்சிஸ்ட் கட்சியின் வங்க நாளிதழான 'கணசக்தி', ஆங்கிலவாரஏடு 'பீப்பிள்ஸ் டெமாக்ரசி' 'தேசிதி யோசி' ஆகிய பத்திரிகைகளையும் அபகரித்துச் சென்றனர்.

குண்டர்களின் இத்தாக்குதலுக்கு அண்டால் கமிட்டியின் செயலாளர் ஜயந்த குப்தா வன்மையான கண்டனம் தெரிவித்துள்ளார்.